# ஸ்வாத்ம ப்ரகாசிகா

[ஸ்வய அநுபவத்துக்கு வருமாறு ஆத்ம ஸ்வரூபத்தை விளக்கிக் காட்டும் பிரகரணம்.]

**ஜக$^3$த் - காரண மஜ்ஞாந மேகமேவ சித$^3$ந்விதம் |**
**ஏக ஏவ மனஸ்ஸாக்ஷி ஜாநாத்யேவம் ஜகத் - த்ரயம் ||** 1

ஜகத்திற்கு காரணமாயிருப்பது சைதன்யத்தோடு சம்பந்தப்பட்ட அஞ்ஞானம் ஒன்றுதான். மூவுலகமும் இவ்விதம்தான் என்று மனத்திற்கும் ஸாக்ஷியாயிக்கிற ஒருவரே அறிகிறார்.

**விவேக யுக்த பு$^3$த்$^3$த்$^4$பா(அ)ஹம் ஜாநாம் - யாத்மாந - மத்$^3$வயம் |**
**ததா(அ)பி ப$^3$ந்த$^4$மோக்ஷாதி$^3$ வ்யவஹார: ப்ரதீயதே ||** 2

விவேகத்தோடு கூடின புத்தியினால் நான் இரண்டற்றதாக ஆத்மாவை அறிகிறேன். அப்படியிருந்தும் (ஸம்சாரத்தால் கட்டுப்பட்ட) பந்தம் (அதிலிருந்து விடு விக்கப்பட்ட) முதலான வியவஹாரம் தோன்றிக்கொண்டேயிருக்கிறது.

**விவர்த்தோ(அ)பி ப்ரபஞ்சோ மே ஸத்யவத்$^3$ பா$^4$தி ஸர்வதா$^3$ |**
**இதி ஸம்சய - பாசேந ப$^3$த்$^3$தோ$^4$(அ)ஹம் சி$^2$ந்த்$^3$தி$^4$ ஸம்சயம் ||** 3

பிரபஞ்சமானது வெறும் தோற்றமாக இருந்தபோதிலும் எனக்கு எப்பொழுதும் உண்மைப்பொருளாகவே விளங்குகிறது, என்னும் (இந்த) ஐயமாகிற கயிற்றால் நான் கட்டப்பட்டவனாக இருக்கிறேன். அந்த ஐயத்தை அறுத்துவிடும்.

**ஏவம் சிஷ்ய வச : ச்ருத்வா குருராஹோத்தரம் ஸ்புடம் |**

இவ்விதமாக சிஷ்யனுடைய வார்த்தையைக்கேட்டு குருவானவர் தெளிவாக பதில் கூறுகிறார்.

**நாஜ்ஞாநம் ந ச பு$^3$த்$^2$தி$^4$ச்ச ந ஜக$^3$த் ந ச ஸாக்ஷிதா ||** 4

**ப$^3$ந்த$^4$ - மோக்ஷாத$^3$ய: ஸர்வே க்ருதா: ஸத்யே(அ)த்$^3$வயே த்வயி |**

அஞ்ஞானம் என்பதும் கிடையாது, புத்தியும் கிடையாது. ஜகத்தும் கிடையாது. மரணியாயிருக்கும் தன்மையும் கிடையாது. பந்தம், மோஹம் முதலான எல்லா வியவஹாரங்களும் ஸத்யமான இரண்டற்ற உன்னிடத்தில் கல்பிக்கப்பட்டவை களேயாகும்.

**பா3தீத் - யுக்தே ஜக3த் ஸர்வம் ஸத்3ரூபம் ப்3ரஹ்ம த3த் - ப3வேத் ||** 5

**ஸர்பாதௌ3 ரஜ்ஜு ஸத்தேவ ப்3ரஹ்ம ஸத்தைவ கேவலம் |**
**ப்ரபஞ்சாதா4ர - ரூபேண வர்ததே தஜ் ஜக3த் ந ஹி: ||** 6

எல்லா ஜகத்தும் பிரகாசிக்கிறதென்று சொன்னால் அது "இருக்கும்" ஸ்வருபத்தையுடைய பிரஹ்மமாகத்தான் இருக்கவேண்டும். பாம்பு முதலானவைகளில் (தோன்றும் இருப்பானது) கயிற்றின் இருப்புதான். தனித்து (மாறுதல் அடையாமல்) பிரபஞ்சத்திற்கு ஆதாரமாயிருக்கும் தன்மையோடு இருந்து வருகிறது. ஆகையால் ஜகத் என்பது (தனித்து இருப்பு உடையது) அல்ல.

**யதே2க்ஷு-மபி4ஸம்வ்யாப்ய சர்கரா வர்ததே ததா2 |**
**ஆச்சர்ய ப்3ரஹ்ம - ரூபேண த்வம் வ்யாப்தோஸி ஜ3கத் - த்ரயம் ||** 7

எவ்விதம் சர்க்கரையானது கரும்பை எல்லாவிடத்திலும் நன்கு வியாபித்துக் கொண்டு இருக்கிறதோ, அவ்விதமே ஆச்சர்யமான பிரஹ்மம் என்ற ரூபத்துடன் நீ மூவுலகத்தையும் வியாபித்தவனாக இருக்கிறாய்.

**மரு - பூ4மௌ ஜலம் ஸர்வம் மரு பூ மாத்ரமேவ தத் |**
**ஜ3கத் த்ரயமித3ம் ஸர்வம் சிந்மாத்ரம் ஸுவிசாரத: ||** 8

கானல் தரையில் (தோன்றும்) அந்த ஜலமெல்லாம் கானல் தரையேதான். (அவ்விதமே) நன்கு விசாரம் செய்து பார்த்தால் இந்த மூவுலகம் எல்லாம சைதன்யமே தான். (பிரஹ்ம மாகிய ஏகஞான, ஏக உணர்வுதான்).

**ப்3ரஹ்மாதி3 - ஸ்தம்ப3 - பர்யந்தா: ப்ராணிநஸ்த்வயி கல்பிதா: |**
**பு3த்3பு3தா3தி - தரங்கா3ந்தா விகாரா: ஸாக3ரே யதா3 ||** 9

எப்படி ஸமுத்திரத்தில் நீர்குமிழி முதல் அலை வரையில் உள்ள மாறுதல்கள் கல்பிக்கப்பட்டிருக்கிறதோ (அப்படி) பிரஹ்மா முதல் சிறுபுல் வரையிலுள்ள பிராணிகள் உன்னிடத்தில் கல்பிககப்பட்டவர்கள்.

**தரங்க3த்வம் த்4ருவம் ஸிந்து3ர் - ந வாஞ்ச2தி யதா2 ததா2 |**
**விஷயாநந்த3 வாஞ்சா2 தே ந ஸதா3நந்த - ரூபத: ||** 10

எப்படி ஸமுத்திரமானது அலையாக இருக்கும் தன்மையை நிச்சயமாக ஆசைப் படாதோ, அப்படியே எப்பொழுதும் நீ ஆனந்த ஸ்வருபமுள்ளவனாதலால் உனக்கு விஷயங்களிலிருந்து கிடைக்கக்கூடிய ஆனந்தத்தில் ஆசை இருக்காது.

**பிஷ்டம் வ்யாப்ய கு3டோ3 யத்3வந் மாது3ர்யம் ந ஹி வாஞ்சதி |**
**பூர்ணாநந்தோ3 ஜகத்3-வ்யாப்ய ததா3நந்த3ம் ந வாஞ்சதி: ||** 11

மாவை வியாபித்துக்கொண்டு இருக்கும் வெல்லமானது தித்திப்பை எப்படி ஆசைப்படுகிறதில்லையோ, அப்படியே ஜகத்தை வியாபித்துக்கொண்டு இருக்கும் பரிபூரண ஆனந்த ஸ்வருபம், (ஆத்மா) அதனுடைய (ஜகத்தினுடைய) ஆனந்தத்தை ஆசைப்படுகிறதில்லை.

(மாவில் தித்திப்புக்கிடையாது. அதைத் தித்திக்கும்படிச் செய்வது அதில் கலந்துள்ள வெல்லம். அப்படியிருக்கையில் மாவிற்குள்ள தித்திப்பு தனக்குத்தேவை என்று வெல்லம் நினைக்குமா? அதே போல ஜகத்தில் ஆனந்தம் கிடையாது. ஆனந்த ஸ்வரூபமான ஆத்மா ஜகத்தில் வியாபித்திருப்பதால் ஜகத்தில் ஆனந்தம் தோன்றுகிறது. இப்படியிருக்க, ஜகத்தின் ஆனந்தம் தனக்கு வேண்டுமென்று ஆத்மா அபேக்ஷிகுமா?)

**தா3ரித்ர்யாசா யதா3 நாஸ்தி ஸம்பந்நஸ்ய ததா2 தவ |**
**ப்ரஹ்மாநந்த3 நிமக்நஸ்ய விஷயாசா ந ஸம்பவேத் ||** 12

எப்படி அதிகப் பணக்காரனுக்கு ஏழையாய் இருக்கும் தன்மையில் ஆசை கிடையாதோ, அப்படியே பிரஹ்மத்தின் ஆனந்தத்தில் மூழ்கிக்கிடக்கிற உனக்கு விஷயங்களில் ஆசை சம்பவிக்காது.

**விஷம் த்3ருஷ்ட்வா(அ)ம்ருதம் த்3ருஷ்ட்வா விஷம் த்யஜதி பு3த்3தி4மாந் |**
**ஆத்மாநமபி த்3ருஷ்ட்வா த்வம் த்யஜாநாத்மாநமாத3ராத் ||** 13

புத்தியுள்ளவன் விஷயத்தையும் பார்த்து, அமிருதத்தையும் பார்த்துவிட்டால் விஷத்தை விட்டு விடுவான் (அப்படியே) நீ ஆத்மாவையும் பார்த்து, அநாத்மாவையும் பார்த்துவிட்டு ஆத்மாவல்லாததை வெகு ஞாபகமாய் விட்டுவிடு.

**க4டாவபா4ஸகோ பா4நுர் க3ட - நாசே ந நச்யதி |**
**தே3ஹாவபா4ஸக ஸாக்ஷீ தே3ஹநாசே ந நச்யதி ||** 14

குடத்தைப் பிரகாசிக்கும்படிச் செய்கிற சூர்யன் குடத்திற்கு நாசம் வரும்போது தான் நாசம் அடைவதில்லை. (அப்படியே) தேகத்தைப் பிரகாசிக்கும்படிச் செய்கிற சாக்ஷியாய் இருக்கிற ஆத்மா தேஹம் இல்லாமல் போகும் போது இல்லாமல் போவதில்லை.

**நிராகாரம் ஜக3த் ஸர்வம் நிர்மலம் ஸச்சிதா3த்மகம் |**
**த்3வைதாபா4வாத் க2தம் கஸ்மாத் - ப4யம் பூர்ணஸ்ய தே வதம் ||** 15

ஜகத்துக்கு எல்லாம் (வாஸ்தவத்தில்) ரூபமற்ற நிர்மலமாயுள்ள ஸத்தாகவும், ஞான ஸ்வருபமாகவுமிருக்கிற பிஹ்மமேயாகும். இரண்டாவது பதார்த்தம் இல்லாத தினால் பரிபூர்ணமாயிருக்கிற உனக்கு எவ்விதம் எந்தக்காரணத்தைக்கொண்டு பயம்

ஏற்படும்? சொல்.

**ப்$^{3}$ரஹ்மாதி$^{3}$கம் ஜக$^{3}$த் ஸர்வம் த்வய்யாநந்தே$^{3}$ ப்ரகல்பிதம் |**
**த்வய்யேவ லீனம் ஹி ஜக$^{3}$த் த்வம் க$^{2}$தம் லீயஸே வத$^{3}$ ||** 16

பிரஹ்மா முதலான ஜகத்து எல்லாம் ஆனந்த ஸ்வரூபமாயுள்ள உன்னிடத்தில் நன்கு கல்பிக்கப்பட்டு இருக்கிறது. ஜகத்தான்து உன்னிடத்திலேயே லயத்தையும் (அழிவையும்) அடைந்து விடுகிறது. (அப்படியிருக்க) நீ எப்படி லயம் (அழிவு) அடைய முடியும்? சொல்.

**ந ஹி ப்ரபஞ்சோ நஹி பூத$^{4}$ - ஜாதம்**
**ந சேந்த்$^{3}$ரியம் ப்ராண க$^{3}$ணோ ந தே$^{3}$ஹ: |**
**ந பு$^{3}$த்$^{3}$தி$^{4}$ சித்தம் ந மநோ ந கர்தா**
**ப்$^{3}$ரஹ்மைவ ஸத்யம் பரமாத்மரூபம் ||** 17

பிரஹ்மம் தான் ஸத்யமாகவும், உத்கிருஷ்டமான ஆத்ம ஸ்வரூபமாகவும், இருக்கிறது ஜகத்து அப்படியல்ல; (பஞ்ச) பூதங்களின் கூட்டமும், அப்படியல்ல. இந்திரய மும் இல்லை. (ஐந்துவித) பிராணக கூட்டமும் இல்லை, தேஹமும் இல்லை; புத்தியும் இல்லை, சித்தமும இலலை, மனசும் இல்லை, செய்கிறவன் (அஹங்காரமும்) இல்லை.

**ஸர்வம் ஸுக$^{2}$ம் வித்$^{3}$தி$^{4}$ ஸுது:க$^{2}$ நாசாத்**
**ஸர்வம் ச ஸத$^{3}$ - ரூபமஸத்ய நாசாத் |**
**சித்$^{3}$ரூப - மேவம் ப்ரதிபா$^{4}$ந யுகதம்**
**தஸ்மாதக$^{2}$ண்ட$^{3}$ம் பரமாத்ம ரூபம் ||** 18

துக்கமெல்லாம் நன்கு போய்விடுகிறபடியால் எல்லாம் ஆனந்த ஸ்வரூபம் என்று அறி, அஸதயமெல்லாம் போய்விடுகிறபடியால் எல்லாவற்றையும் ஸத் ஸ்வரூபம் (என்று அறி) அப்படியே பிரதிபலிக்கும் தன்மையோடு கூடியதால் சித் ஸ்வரூபம் (என்று அறி) ஆகையால் பரமாதம ஸ்வரூபமானது பிரிவற்றது.

[ஒரு பதார்த்தம் சில சமயம் இருந்து சில சமயம் இல்லாமல் போனால் அது ஸத் பதார்த்தம் ஆகாது அப்படியே, சில சமயம் பிரகாசமாயிருந்து சில சமயம் பிரகாசமிலலாமல் போனால் அது சித் பதார்த்தம் ஆகாது. அப்படியே, சில சமயம் சுகமாயிருந்து சில சமயம் துக்கமாயிருந்தால் அது ஆனந்த பதார்த்தமாகாது. அவைகளுக்கெல்லாம் காலத்தினாலும், தேசத்தினாலும் வஸ்துவினாலும் வரையரை உண்டு. எப்பொழுதும் ஸத்தாகவும், சித்ததாகவும் ஆனந்தமாகவும் இருக்கிற பரமாத்ம ஸ்வரூபத்திற்கு வரையரையே கிடையாது.]

**சிதே3வ தே3ஹஸ்து சிதே3வ லோகா:**
**சிதே3வ பூ4தானி சிதி3ந்த்3ரியாணி |**
**கர்தா சி3தந்தக: கரணம் சிதே3வ**
**சிதே3வ ஸத்யம் பரமார்த2 ரூபம் ||** 19

தேகமும் சைதன்யமே, உலகங்களும் சைதன்யமே, பூதங்களும் சைதன்யமே, இந்திரியங்களும் சைதன்யமே, செய்கிறவன (அஹங்காரம்) சைதன்யமே, உன் கருவியான அந்தக்கரணமும் சைதன்யம் தான்.

**ந மே ப3ந்தோ4 ந மே முக்திர் ந மே சாஸ்த்ரம் நமே கு3ரு: |**
**மாயா - மாத்ர விலாஸோ ஹி மாயாதீதோ(அ)ஹ - மத்3வய: ||** 20

எனக்கு ஸம்ஸாரபந்தம் கிடையாது. எனக்கு மோக்ஷமும் கிடையாது. எனக்கு சாஸ்திரமும் கிடையாது, எனக்கு குருவும் கிடையாது (இவையெல்லாம்) மாயையினாலேயே பிரகாசிப்பவைகள். நான் மாயைக்கு அப்பாற்பட்டவனாய், இரண்டற்றவனாய் இருப்பவன்

.

**ராஜ்யம் கரோது விஜ்ஞாநீ பி4க்ஷாமடது நிர்ப4ய: |**
**தோ3ஷைர் ந லிப்யதே சுத்த4: பத்3ம - பத்ர - மிவாம்பஸா ||** 21

உயர் ஞானமடைந்தவர் (ஆத்ம ஸாக்ஷாத்கார மடைந்தவர்) ராஜ்யத்தை ஆளட்டும். அல்லது பிக்ஷைக்காக அலையட்டும். ராஜ்ஜியம் போய் விடுமோ பிக்ஷை கிடைக்குமா என்பது போன்ற பயமே இல்லாதவராக இருப்பார். தாமரை இலை ஜலத்தினால் (எப்படி அழுக்காக ஆகிறதில்லையோ அதைப்போலவே) சுத்தராயிருக்கிற ஞானி (எந்த காரியம் செய்தபோதிலும்) தோஷங்களினால் அழுக்கடைவதில்லை.

**புண்யாநி பாப கர்மாணி ஸ்வப்நகா3னி ந ஜாக்3ரதி |**
**ஏவம் ஜாக்3ரத் புண்ய - பாப - கர்மாணி நஹிமே ப்ரபோ: ||** 22

ஸ்வப்னாவஸ்தையில் செய்யும் புண்ய கர்மாக்களோ பாப கர்மாக்களோ விழிப்பு தசையில் கிடையாது. இவ்விதமாகவே விழிப்பு தரையில் செய்யப்படும் புண்ணிய பாப கர்மாக்களும் (எல்லாவற்றிற்கும் மேலாக) பிரபுவாக இருக்கிற எனக்குக்கிடையாது.

**காய: கரோது கர்மாணி வ்ருதா2 வாகு3ச்யதா - மிஹ |**
**ராஜ்யம் த்4யாயது வா பு3த்3தி4: பூர்ணஸ்ய மம கா க்ஷதி: ||** 23

சரீரம் கர்மாக்களை செய்யட்டும், இங்கே வாக்கானது வீணாக சொல்லப்பட்டுக் கொண்டிருக்கட்டும், அல்லது புத்திராஜ்ஜியத்தைப்பற்றி தியானம்

செய்து கொண்டிருக் கட்டும். (அதனால்) பரிபூர்ண ஸ்வரூபனான எனக்கு என்ன கெடுதல்?

**ப்ராணாச் - சரந்து தத்$^{3}$ - த$^{4}$ர்மை: காமைர் வா ஹந்யதாம் மந: ।**
**ஆநந்தா$^{3}$ம்ருத பூர்ணஸ்ய மம து$^{3}$: க$^{3}$ம் கத$^{2}$ம் ப$^{4}$வேத் ॥** 24

பிராணன்கள் (இந்திரியங்கள்) அதன் ஸ்வபாவத்திற்குத் தக்கபடி ஸஞ்சரிக்கட்டும்; அல்லது மனஸ் ஆசைகளினால் பீடிக்கப்படட்டும். (அதனால்) ஆனந்தமாகிற அமிருதம் நிரம்பிய எனக்கு துக்கமானது எப்படி ஏற்படும்?

**ஆநந்தா$^{3}$ம்பு$^{3}$தி$^{4}$ மக்$^{3}$நோ(அ)ஸௌ தே$^{3}$ஹீ தத்ர ந த்$^{3}$ருச்யதே ।**
**லவணம் ஜலமத்$^{4}$யஸ்தம் யதா$^{2}$ தத்ர லயம் க$^{3}$தம் ॥** 25

எப்படி ஜலத்தின் நடுவில் இருக்கிற உப்பு அங்கே லயம் அடைந்து விடுமோ, அப்படியே ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் இந்த தேஹத்தை உடையவன் (ஜீவாத்மா) அங்கே காணப்படுவதில்லை.

**இந்த்$^{3}$ரியாணி மந: ப்ராணா அஹங்காரா: பரஸ்பரம் ।**
**ஜாட்$^{3}$யே ஸங்க$^{3}$தி - முத்ஸ்ருஜ்ய மக்$^{3}$நா மயி சித$^{3}$ர்ணவே ॥** 26

இந்திரியங்கள், மனஸ், பிராணங்கள், அஹங்காரம் (இவையெல்லாம்) ஒன்றுக் கொன்று ஜடத்தன்மையினால் ஏற்பட்ட சேர்க்கையை விட்டுவிட்டு, சைதன்ய ஸமுத்திரமாகிய என்னிடத்திலே அமிழ்ந்து விடுகின்றன.

**ஆத்மாந - மஞ்ஜஸா வேத்$^{3}$மி த்வஜ்ஞாநம் ப்ரபலாயிதம் ।**
**கர்த்ருத்வ - மத$^{3}$ய மே நஷ்டம் கர்தவ்யம் வா(அ)பி ந க்வசித் ॥** 27

ஆத்மாவை முறைப்படி அறிந்துவிட்டேன். அஞ்ஞானமும் எங்கோ ஓடிவிட்டது. இப்பொழுது என் கர்த்ருத்வம் (செய்கிறவன் என்ற தன்மை) நீங்கிவிட்டது. செய்ய வேண்டியது ஒரு போதும் இலலை.

**சித3ம்ருத - ஸுக$^{2}$ ராசௌ சித்தபே$^{2}$நம் விலீநம்**
**க்ஷயமதி$^{4}$க$^{3}$த ஏவம் வருத்தி சஞ்சத் - தரங்க$^{3}$: ।**
**ஸ்திமித - ஸுக$^{2}$- ஸமுத்$^{3}$ரோ நிர்விசேஷ்ட: ஸுபூர்ண:**
**கத$^{3}$மிஹ மம து$^{3}$:க$^{2}$ம் ஸர்வதை$^{3}$கோ(அ)ஹமஸ்மி ॥** 28

சைதன்யமாகிற அமிருதம் நிரம்பிய ஆனந்தம் சமுத்திரத்தில் மனசாகிற நுரை நன்கு கரைந்துவிட்டது. அப்படியே எப்பொழுதும் சலித்துக்கொண்டிருக்கும் மனோ விருத்தியாகிற அலை நாசத்தை அடைந்துவிட்டது. அசைவற்றிருக்கும் ஆனந்த ஸாகரம் ஒருவித வேலையும் இன்றி நன்கு நிரம்பியிருக்கிறது.

எப்பொழுதும் நான் ஒருவனாகவே இருக்கிறேன். அப்படி இருக்கையில் இங்கே எனக்கு துக்கம் எப்படி வரும்?

**ஆநந்த3 ரூபோ(அ)ஹமக2ண்ட3 போ3த4:**
**பராத்பரோ(அ)ஹம் க4நசித் - ப்ரகாச: |**
**மேகா4 யதா2 வ்யோம ந ச ஸ்ப்ருசந்தி**
**ஸம்ஸார - து3:கா2நி ந மாம் ஸ்ப்ருசந்தி ||** 29

நான் ஆனந்த ஸ்வரூபன், துண்டுபடாத ஞான ஸ்வரூபன். நான் மேலானதிற்கும் மேலானவன், கனமான ஞான ஒளி வடிவினன். எப்படி மேகங்கள் ஆகாசத்தைத் தொடுவதில்லையோ, (அப்படியே) ஸம் சாரத்தில் உள்ள துக்கங்கள் என்னைத் தொடாது.

**அஸ்தி2 - மாம்ஸ - புரீஷாந்த்ர - சர்ம - லோம - ஸமந்வித: |**
**அந்நாத3: ஸ்தூ2ல தே3ஹ: ஸ்யாத3தோ(அ)ஹம் சுத்3த4 - சித்3க4ந: ||** 30

**ஸ்தூ2ல தே3ஹாச்ரிதா ஏதே ஸ்தூ2லாத்3 பி4ந்நஸ்ய மே ந ஹி |**

எலும்பு, மாமிசம், மலம், குடல், தோல், ரோமம் இவைகளோடு சேர்ந்ததாயும் அன்னத்தை சாப்பிடுகிறதாயும் ஸ்தூலதேகம் இருக்கும். அதிலிருந்து வேறான நான் நிர்மல ஞானத்தின் அடர்ந்த ஸ்வரூபன். ஸ்தூல தேகத்தை ஆச்ரயித்திருக்கும் இவை ஸ்தூலத்திலிருந்து வேறுபட்ட எனக்குக் கிடையாது.

**லிங்க3ம் ஜடா3த்மகம் நாஹம் சித் - ஸ்வரூபோ(அ)ஹ - மத்3வய: |** 31

**க்ஷுத்பிபாஸாந்த்4ய - பா3தி4ர்ய - காம - க்ரோதா4த3யோ(அ)கி2லா: |**
**லிங்க3 - தே3ஹாச்ரிதா ஹ்யேதே நைவாலிங்க3ஸ்ய மே விபோ4: ||** 32

ஜட ஸ்வரூபமாயிருக்கும் லிங்கம் என்கிற ஸூக்ஷ்ம சரீரம் நான் அல்ல. நான் ஞான ஸ்வரூபன்; இரண்டற்றவன். பசி, தாகம், குருட்டுத்தனம், செவிட்டுத்தனம் ஆசை, கோபம் முதலானவை எல்லாம் ஸூக்ஷ்ம சரீரத்தை ஆசிரயித்திருப்பவை. ஸூக்ஷ்ம சரீரமில்லாத ஸர்வ வியாபகனான எனக்கு இவை கிடையவே கிடையாது.

**அநாத்3யஜ்ஞான - மேவாத்ர காரணம் தே3ஹ உச்யதே |**
**நாஹம் காரண தே3ஹோ(அ)பி ஸ்வப்ரகாசோ நிரஞ்ஜன: ||** 33

**ஜட3த்வ - ப்ரிய - மோத3தவ - த4ர்மா: காரண - தே3ஹகா3: |**
**ந ஸந்தி மம நித்யஸ்ய நிர்விகார ஸ்வரூபிண: ||** 34

இங்கே ஆதியில்லாத அஞ்ஞானம்தான் காரணசரீரம் என்று சொல்லப்படுகிறது. ஸ்வயம் பிரகாசமாய் எவ்வித தோஷமுமில்லாத நான் அந்தக் காரண சரீரமும் இல்லை. காரண தேஹத்திலுள்ள ஜடமாயிருக்கும் தன்மை, பிரியமாயிருக்கும் தன்மை, சந்தோஷ மாயிருக்கும் தன்மை என்ற தர்மங்கள் நித்யனாய் எவ்வித மாறுதலுமடையாததன்மை உடையவனுமாய் இருக்கும் எனக்குக் கிடையாது.

**ஜீவாத்[3] - பி[4]ந்ந: பரேசோ(அ)ஸ்தி பரேசத்வம் குதஸ் தவ ।**
**இத்யஜ்ஞ - ஜந ஸம்வாத[3] விசார: க்ரியதே(அ)து[4] நா ॥** 35

ஜீவனிடமிருந்து வேறுபட்டவராக பரமேசுவரர் இருக்கிறார். உனக்குப் பரமேசுவரராயிருக்கும் தன்மை எப்படி (வரும்)? என்று, அறிவில்லாத ஜனங்களுடைய பேச்சு விஷயமாய் விசாரமானது இப்பொழுது செய்யப்படுகிறது.

**அதி[4]ஷ்டா[2]நம் சிதா[3]பா[4]ஸோ பு[3]த்[3]தி[4]ரேதத் த்ரயம் யதா[3] ।**
**அஜ்ஞாநாதே கவத்[3] பா[4]தி ஜீவ இத்யுச்யதே ததா[3] ॥** 36

எல்லாவற்றிற்கும் அதிஷ்டானமாயுள்ள சுத்த சைதன்யம், சைதன்யத்தின் தோற்றம், புத்தி ஆகிய இந்த மூன்றும், எப்பொழுது அறியாமையினால் ஒன்றாயிருப்பது போலவே தோன்றுகிறதோ, அப்பொழுது ஜீவன் என்று சொல்லப்படுகிறது.

[ஸூர்ய கிரணத்திற்கு நேரே கண்ணாடியைக் காட்டினால் அதில் ஸூர்யனுடைய பிரதிபிம்பம் விழும். அதுவும் பிரகாசமாயிருக்கும். அந்தப் பிரகாசத்தை வீட்டிற்குள் விழச்செய்தால் வீட்டிலுள்ள பதார்த்தங்களைப் பிரகாசிக்கும்படி செய்யும். இவ்விதமாக வீட்டிலுள்ள பதார்த்தங்களை எடுத்துக்காட்டுவது ஸூர்யன், ஸூர்யனுடைய பிரதிபிம்பம், கண்ணாடி ஆகிய மூன்றும் சேர்ந்ததேயாகும். இதே மாதிரி சுத்த சைதன்யம், புத்தி, புத்தியில் பிரதிபலிக்கும் சைதன்யத்தோற்றம் இம்மூன்றும் சேர்ந்து உலகத்தை அறிகிறது. இந்த மூன்றும் சேர்ந்ததுதான் ஜீவன்.]

**அதி[4]ஷ்டா[2]நம் ந ஜீவ: ஸ்யாத் ப்ரத்யேகம் நிர்விகாரத: ।**
**அவஸ்து ஸ்யாத் சிதா[3]பா[4]ஸோ நாஸ்தி தஸ்ய ச ஜீவதா ॥** 37

**ப்ரத்யேகம் ஜீவதா நாஸ்தி பு[3]த்[3]தே[4]ரபி ஜட[3] தவத: ।**
**ஜீவ ஆபா[4]ஸ் - கூடஸ்த[2] - பு[3]த்[3]தி[4] த்ரயமதோ ப[4]வேத் ॥** 38

அதிஷ்டானமான சுத்தசைதன்யம் மாறும் தன்மையற்றதால் தனித்து ஜீவனாக இருக்கமுடியாது. (புத்தியில் பிரதிபிம்பிக்கும்) சைதன்யத்தின் தோற்றம் வாஸ்தவமாக இல்லாத பதார்த்தமேயாகும். அதற்கும் ஜீவனாயிருக்கும் தன்மை கிடையாது. புத்தியும் ஜடமாயிருக்கும் தன்மையுடையதால், தனித்து

ஜீவனாயிருக்கும் தன்மை இல் லாதது. ஆகையினால் (புத்தியில் தோன்றும்) சைதன்ய ஆபாஸம் (பிரதி பலிப்பு) மாறாத அடிப்படையான சுத்த சைதன்யம், புத்தி ஆகிய மூன்றும் சேர்ந்துதான் ஜீவனாக இருக்க முடியும்.

**மாயா(ஆ)பா[4]ஸோ விசுத்[3]தா[4]த்மா த்ரயமேதந் மஹேச்வர: |**
**மாயா(ஆ)பா[4]ஸோ(அ)ப்-யவஸ்துத்வாத் ப்ரத்யேகம் நேச்வரோ ப[4]வேத் ||** 39

**பூர்ணத்வாந் நிர்விகாரத்வாத்[3] விசுத்[3]தா[4]த்மா ந சேச்வர: |**
**ஜட[3]த்வ ஹேதோர் - மாயாயா - மீச்வரத்வம் நு து[3]ர்க[4]டம் ||** 40

**தஸ்மாதே[3]தத் த்ரயம் மித்[3]யா தத[3]ர்தோ[2] நேச்வரோ ப[4]வேத் |**

மாயை, (மாயையில் பிரதிபலிக்கும்) சைதன்யத்தின் தோற்றம், சுத்த சைதன்யம் ஆகிய இந்த மூன்றும் சேர்ந்து பரமேசுவரர். (அவைகளின்) மாயையில் பிரதிபலிக்கும் தோற்றம் வாஸ்தவத்தில் ஒரு பதார்த்தமேயில்லாததினால் தனித்து ஈசுவரனாக இருக்க முடியாது. சுத்தசைதன்யமும் எங்கும் நிரம்பியிருப்பதினாலும் மாறுதலற்ற தன்மையுடன் கூடியிருப்பதினாலும் ஈசுவரன் இல்லை. மாயையிலோ ஜடத்தன்மை இருக்கும் காரணத் - தினால் ஈசுவரத்தன்மை பொருந்தாது. ஆகையினால் இந்த மூன்றும் மித்யையே (உண்மைபோலத் தோன்றினாலும் பொய்யே). அவைகளின் பொருள் ஈசுவரனாக இருக்கமுடியாது.

[ஜீவனிடத்தில் எப்படி மூன்று அம்சங்களோ, அப்படியே ஈசுவரனிடத்திலும் மாயை, சுத்தசைதன்யம், மாயையில் சுத்தசைதன்யத்தின் பிரதிபிம்பம் ஆகிய மூன்று அம்சங்கள் இருக்கின்றன. அவை தனித்தனியே ஈசுவரனாகமாட்டா. அஞ்ஞானத்தினால் மூன்றையும் சேர்த்து ஒன்றாகப் பார்க்கும்போதுதான் ஈசுவரன்.]

**இதி ஜீவேச்வரௌ பா[4]த: ஸ்வாஜ்ஞாநாந் ந ஹி வஸ்துத: ||** 41

**க[4]டாகாச மடா[2]காசௌ மஹாகாசே ப்ரகல்பிதௌ |**
**ஏவம் மயி சிதா[3]காசே ஜீவேசௌ பரிகல்பிதௌ ||** 42

இவ்விதமாக ஆத்ம தத்துவத்தை அறியாததனால் ஜீவனும் ஈசுவரனும் தோன்றுகிறார்கள். வாஸ்தவமாக (இருவரும்) கிடையாது. வியாபகமாயிருக்கிற பெரிய ஆகாசத்தில் குடத்திலுள்ள ஆகாசம், மடத்திலுள்ள ஆகாசம் என்ற இரண்டும் கல்பிக்கப்பட்டவைகளே ஆகும். அப்படியே சைதன்ய ஆகாசமாயிருக்கிற என்னிடத்தில் ஜீவனும் ஈச்வரனும் கல்பிக்கப்பட்டவர்கள்.

[ஸர்வ வியாபகமாயிருக்கிற ஆகாசத்தின் மத்தியில் ஒரு மடத்தைக் கட்டினால் மடத்திலுள்ள ஆகாசம் என்றும், குடத்தை வைத்தால் குடத்திலுள்ள ஆகாசம் என்றும் வியவஹாரம் ஏற்பட்டு விடுகிறது. அப்படியே மாயை எனகிற

உபாதியை வைத்து ஈச்வரன் என்றும் அந்தக்கரணம் என்ற உபாதியை வைத்து ஜீவன் என்றும் வியவஹாரம் ஏற்படுகிறது. இவ்விரு உபாதிகளையும் விலக்கிப் பார்த்தால் இரண்டும் சுத்த சைதன்யமேயாகும்.]

**மாயா தத்கார்ய விலயே நேச்வரத்வம் ந ஜீவதா ।**
**தத: சுத்[3]த[4] சிதே[3] வாஹம் சித்[3] - வ்யோம நிருபாதி[4]த: ॥** 43

மாயையும் அதிலிருந்து உண்டானவைகளும் மறைந்துவிடும் போது ஈசுவரனா யிருக்கும் தன்மை கிடையாது, ஜீவனாக இருக்கும் தன்மையும் கிடையாது. ஆகையினால், நான் உபாதியற்றவனாயிருப்பதால் சைதன்ய ஆகாசமான சுத்தமான சைதன்யமே.

**ஸத்ய சித்[3]க[4]ந மநந்த - மத்[3]வயம்**
**ஸர்வ த்[3]ருச்ய ரஹிதம் நிராமயம் ।**
**யத்-பத[3]ம் விமல - மத்[3]வயம் சிவம்**
**தத் ஸதா[3](அ)ஹமிதி மௌநமாச்ரயே ॥** 44

ஸத்யமாகவும் சைன்யக்கட்டியாகவும், முடிவற்றதாகவும், இரண்டற்றதாகவும், பார்க்கப்படும் (தனக்கு வேறாக அனுபவிக்கப்படும்) தன்மையுள்ள எல்லா விஷயங்களி லிருந்தும் விடுபட்டதாகவும், எவ்வித தோஷமுமற்றதாகவும், நிர்மலமாகவும், ஒன்றாகவும், மங்களமாகவும் எந்தநிலை இருக்கிறதோ, அதுவாகவே எப்பொழுதும் நான் இருக்கிறேன் என்பதனால் மௌனத்தை ஆசிரயிக்கிறேன். (மனமடங்கிய நிலையில் தோய்ந்திருக்கிறேன்.)

**பூர்ண மத்[3]வய - மக[2]ண்ட[3] சேதநம்**
**விச்வ - பே[4]த[3] - கலநாதி[3] வர்ஜிதம் ।**
**அத்[3]விதீய பரஸம்வித[3]ம்சகம்**
**தத் ஸதா[3](அ)ஹமிதி மௌநமாச்ரயே ॥** 45

எங்கும் நிரம்பியதும், இரண்டற்றதும், துண்டுபடாத சைதன்யமும், ஜகத்திலுள்ள வேற்றுமைத் தோற்றம் முதலியவற்றதும் இரண்டற்ற மேலான ஞானஸ்வரூபத்தின் அம்சமும் எதுவோ, அதுவே எப்பொழுதும் நான் என்ற காரணத்தினால் மௌனத்தை ஆசிரயிருக்கிறேன்.

**ஜந்ம - ம்ருத்யு - ஸுக[2] - து[3]:க[2] வர்ஜிதம்**
**ஜாதி - நீதி குலகோ[3]த்ர - தூ[3]ரக[3]ம் ।**
**சித்[3]-விவர்த்த ஜக[3]தோ(அ)ஸ்ய காரணம்**
**தத் ஸதா[3](அ)ஹமிதி மௌநமாச்ரயே ॥** 46

பிறவி, சாவு, ஸுகம், துக்கம், இவையற்றதும் ஜாதி, நீதி, குலம், கோத்திரம் இவைகளுக்கு வெகு தூரத்தில் இருப்பதும், சைதன்யத்தின் வெறும் தோற்றமாயுள்ள ஜகத்திற்குக் காரணமும் எதுவோ, அதுவே எப்பொழுதும் நான் என்ற காரணத்தினால் மௌனத்தை ஆசிரயிக்கிறேன்.

**உலூகஸ்ய யதா2 பா4நாவந்த4கார: ப்ரதீயதே ।**
**ஸ்வப்ரகாசே பராநந்தே3 தமோ மூட4ஸ்ய பா4ஸதே ॥** **47**

எப்படிச் சூரியனிடம் (சூரியன் பிரகாசிக்கிற ஸமயத்தில்) கோட்டானுக்கு இருட்டே தெரிகிறதோ, அப்படியே மேலான ஆனந்த ஸ்வரூபமாய் ஸ்வயம் பிரகாசமாயிருக்கிற ஆத்மாவிடம் (சைதன்யம் பிரகாசித்துக்கொண்டேயிருக்கும் போது) மூடனுக்கு இருட் டுத்தான் (அஞ்ஞானத்தால் ஏற்பட்ட மாயா உலகமும் அஹங்கார ஜீவனும்) தெரிகிறது.

**யதா2 த்3ருஷ்டி நிரோதா4ர்த: ஸூர்யோ நாஸ்தீதி மந்யதே ।**
**ததா3(அ)ஜ்ஞாநாவ்ருதோ தே3ஹீ ப்ரஹ்ம நாஸ்தீதி மந்யதே ॥** **48**

எப்படிக் கண்பார்வை தடைப்பட்டுச் சிரமப்படுகிறவன் ஸூர்யன் இல்லையென்று நினைக்கிறானோ, அப்படியே அஞ்ஞானத்தினால் மூடப்பட்டிருக்கும் ஜீவன் பிரஹ்மமானது இல்லை யென்று எண்ணுகிறான்.

**யதா3(அ)ம்ருதம் விஷாத்3 - பி4ந்நம் விஷ தோ3ஷைர் ந லிப்யதே ।**
**ந ஸ்ப்ருசாமி ஜடா3த்3 - பி4ந்நோ ஜட3தோ3ஷாந் ப்ரகாசயந் ॥** **49**

எப்படி விஷத்திலிருந்து வேறுபட்டதாக இருக்கும் அமிருதமானது விஷத்தி னுடைய தோஷங்களினால் தூஷிக்கப்படுகிறதில்லையோ, (அப்படியே) ஜடமான பதார்த்தத்திலிருந்து வேறுபட்டு ஜட பதார்த்தங்களின் தோஷங்களை விளக்கிக் காட்டிக் கொண்டு இருக்கும் நான் அவைகளைத் தொடுவதில்லை.

**ஸ்வல்பா(அ)பி தீ3பகணிகா ப3ஹுளம் நாசயேத் தம: ।**
**ஸ்வல்போ(அ)பி போ3தோ4 மஹதீ - மவித்3யாம் சமயேத் ததா2 ॥** **50**

தீபத்தின் ஒளி அணு வெகு சிறியதாயிருந்தாலும் மிகவும் அதிகமான இருட்டைப் போக்கடித்துவிடும். அப்படியே ஞானமானது வெகு சிறியதாயிருந்தாலும் பெரியதான அஞ்ஞானத்தைப் போக்கடித்து விடும்.

**சித்3 - ரூபத்வாந் ந மே ஜாட்3யம் ஸத்யத்வாந் நாந்ருதம் மம ।**
**ஆனந்த3த்வாந் ந மே து3: க2 - மஜ்ஞாநாத்3 பா4தி தத் த்ரயம் ॥** **51**

ஞானஸ்வரூபனாயிருப்பதனால் எனக்கு ஜடத்தன்மை கிடையாது. ஸத்ய ஸ்வரூப னாயிருப்பதினால் என்னிடத்தில் பொய் கிடையாது. ஆனந்த ஸ்வரூபி

யானதினால் எனக்கு துக்கம் கிடையாது. அந்த மூன்றும் அஞ்ஞானத்தினால் தான் தோன்றுகிறது.

**கால த்ரயே யதா2 ஸர்போ ரஜ்ஜௌ நாஸ்தி ததா2 மயி |**
**அஹங்காராதி3 தே3ஹாந்தம் ஜக3ந்நாஸ்த்யஹ - மத்3வய: || 52**

எப்படி (சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலம் என்ற) மூன்று காலங்களிலும் கயிற்றில் பாம்பு கிடையவே கிடையாதோ, அப்படியே என்னிடத்தில் அஹங்காரம் முதல் சரீரம் வரையுள்ள ஜகத்தானது கிடையாது. நான் இரண்டற்றவன்.

**பா4நௌ தம:ப்ரகாசத்வம் நாங்கீ2குர்வந்தி ஸஜ்ஜநா: |**
**தமஸ் தத்கார்ய ஸாக்ஷீதி ப்ரா4ந்த - பு3த்3தி4ரஹோ மயி || 53**

சூர்யனிடத்தில் இருட்டைப் பிரகாசிக்கும் தன்மை இருப்பதாக அறிவாளிகள் ஒப்புக்கொள்வதில்லை. (ஆகையால்) அஞ்ஞானத்தையும் அதன் கார்யங்களையும் பார்த்துக்கொண்டிருப்பவன் என்பதாக என்னிடத்தில் எண்ணம் கொள்வது பிராந்தியே யாகும். இது வெகு ஆச்சர்யம்.

[ஞானஸ்வரூபனான ஆத்மாவும் அஞ்ஞானகார்யமான ஜடப்பிரபஞ்சமும் பரஸ்பரம் விரோதமாயிருப்பதால் அவை இரண்டிற்கும் எவ்வித ஸம்பந்தமும் இருக்கமுடியாது என்பதுதான் வாஸ்தவம். சூர்யன் இருட்டை அழிப்பவனேயன்று இருட்டைப் பிரகாசப் படுத்துபவனல்ல. அதேபோல, சாக்ஷியாகக்கூட மாயா லோகத்தையும் பிரகாசிப்பவ னல்ல ஆத்ம ஸ்வரூபன்.]

**யதா2 சீதம் ஜலம் வஹ்நி ஸம்ப3ந்தா4 து3ஷ்ணவத் ப4வேத் |**
**பு3த்3தி4 தாதா3த்ம்ய ஸம்ப3ந்தா4த் கர்த்ருத்வம் வஸ்துதோ நஹி || 54**

எப்படி குளிர்ந்த ஜலமானது நெருப்பின் ஸம்பந்தத்தினால் சூடு உள்ளதாக ஆகிறதோ, அப்படியே புத்தியோடு ஒன்றாகத்தோன்றும் ஸம்பந்தம் என்ற காரணத் தினால் ஆத்மாவிற்கு செய்கிறவன் என்ற தன்மை'ஏற்படுகிறது'. வாஸ்தவத்தில் கிடையாது.

**ஜல பி3ந்து3பி4ராகாசம் ந ஸிக்தம் ந ச சுத்4யதி |**
**ததா2 க3ங்கா3ஜலேநாஹம் ந சுத்3தோ4 நித்யசுத்3த4: || 55**

ஆகாசமானது நீர்த்திவிலைகளால் நனைக்கப்படுகிறதில்லை, சுத்தமாவதும் இல்லை. அப்படியே நான் எப்பொழுதும் சுத்தமாகவே இருப்பதால் கங்கா நதியின் ஜலத்தினால் சுத்தமாவதில்லை.

**வ்ருக்ஷோத்பந்த ப2லைர் வ்ருக்ஷோ யதா2 த்ருப்திம் ந க3ச்ச2தி ।**
**மய்யத்4யஸ்தாந்நபாநாத்3யைஸ் - ததா2 த்ருப்திர் ந வித்3யதே ॥** 56

ஒரு மரத்திலிருந்து உண்டான பழங்களினால் அந்த மரமானது எப்படி திருப்தியை அடைகிறதில்லையோ, அப்படியே என்னிடத்தில் கல்பிக்கப்பட்ட அன்னம், பானம் முதலியவைகளால் எனக்கு திருப்தியானது ஏற்படுகிறதில்லை.

**ஸ்தா2ணௌ ப்ரகல்பிதச்சோர: ஸ ஸ்தா2ணுத்வம் ந பா3த4தே ।**
**ஸ்வஸ்மின் கல்பித ஜீவச்ச பா3தி4தும் ஸ்வம் ந சக்யதே ॥** 57

மரக்கட்டையில் ப்ராந்தியால் திருடன் கல்பிக்கப்பட்டவன் அதிலுள்ள கட்டையாயிருக்கும் தன்மையை அந்தத் திருடனால் போக்கடிக்கமுடியாது. அது போலவே தன்னிடத்தில் (அஞ்ஞானத்தால்) கல்பிக்கப்பட்ட ஜீவனும் தன் உண்மை ஸ்வரூபத்தைப் பாதிக்கமுடியாது.

**அஜ்ஞானே பு3த்3தி4 விலயே நித்3ரா ஸா ப4ண்யதே பு3தை4: ।**
**விலீநாஜ்ஞான தத் - கார்யே மயி நித்3ரா கத2ம் ப4வேத் ॥** 58

அஞ்ஞானத்தினிடத்தில் புத்தி நன்கு லயம் அடைந்திருக்கும் போது அந்த நிலை தூக்கம் என்று அறிவாளிகளால் சொல்லப்படுகிறது. அஞ்ஞானமும் அதிலிருந்து ஏற்படுகிறவைகளும் நசித்துப்போயிருக்கிற என்னிடத்தில் தூக்கம் எப்படி இருக்கும்?

**பு3த்3தே4: பூர்ண விகாஸோ(அ)யம் ஜாக3ர: பரிகீர்த்யதே ।**
**விகாராதி3: விஹீநத்வாத் ஜாக3ரோ மே ந வித்3யதே ॥** 59

புத்தியினுடைய நன்கு பிரகாசமாயுள்ள நிலையே ஜாக்ரத் (விழிப்பு) என்று சொல்லப்படுகிறது. ஒருபோதில் பிரகாசிப்பது, ஒருபோதில் பிரகாசிக்காமலிருப்பது என்ற மாறுதல் முதலானவையெல்லாம் இல்லாமலிருக்கும் தன்மையுடைய வனாதலால் எனக்கு ஜாக்ரத் என்கிற நிலை கிடையாது.

**ஸூக்ஷ்ம - நாடீ3ஷு ஸஞ்சாரோ பு3த்3தே4: ஸ்வப்ந: ப்ரஜாயதே ।**
**ஸஞ்சார - த4ர்ம - ரஹிதே ஸ்வப்நோ நாஸ்தி ததா2 மயி ॥** 60

ஸூக்ஷ்ம நாடிகளில் புத்தி ஸஞ்சரிப்பதானது ஸ்வப்னமாக ஆகிவிடுகிறது. அவ் விதம் ஸஞ்சாரமில்லாத என்னிடத்தில் ஸ்வப்னம் கிடையாது.

**பரிபூர்ணஸ்ய நித்யஸ்ய சுத்3த4ஸ்ய ஜ்யோதிஷோ மம ।**
**ஆக3ந்துக - மலாபா4வாத் கிம் ஸ்நாநேந ப்ரயோஜநம் ॥** 61

எங்கும் நிறைந்தவனாகவும் நித்தியனாகவும் சுத்தனாகவும் பிரகாச ஸ்வரூபமாயுமுள்ள எனக்கு வந்து சேரக்கூடிய அழுக்கு கிடையாததனால் ஸ்நாநத்தினால் என் பிரயோஜனம்?,

**தே3சாபா4வாத் க்வ க3ந்தவ்யம் ஸ்தா2நாபா4வாத் க்வ வாஸ்தி2தி: |**
**பூர்ணே மயி ஸ்தா2ந - தே3சௌ கல்பிதாவஹ - மத்3வய: ||** 62

இடம் என்பதே கிடையாத படியால் (நான்) எங்கே போகவேண்டும்? இருப்பிடம் என்றே கிடையாதபடியால் (எனக்கு) எங்கேதான் தங்கவேண்டும்? எங்கும் நிறை என்னிடத்தில் இடம், இருப்பிடம் என்ற இரண்டும் கல்பிக்கப்பட்டவை. இரண்டற்றவன்.

**ப்ராண - ஸஞ்சார ஸம்சோஷாத் பிபாஸா ஜாயதே க2லு |**
**சோஷணாநர்ஹ - சித்3ரூபே மய்யேஷா ஜாயதே கத2ம் ||** 63

பிராணவாயு ஸஞ்சரிப்பதினால் ஏற்படும் வறட்சியினலேயே காஹம் ஏற்படுகிற தன்றோ? - வறண்டுபோவதற்கு இடமில்லாத ஞான ஸ்வரூபனான என்னிடத்தில் இது (தாஹம்) எப்படி ஏற்படும்?

**நாடீ3ஷு பீட்3யேமாநாஸு வாய்வக்3நிப்யாம் ப4வேத் க்ஷுதா4 |**
**தயோ: பீட3ந ஹேதுத்வம் ஸம்வித்3ரூபே கத2ம் மயி ||** 64

வாயுவினாலும் அக்னியினாலும் நாடிகள் பீடிக்கப்படும்போது பசி ஏற்படும். ஞான ஸ்வரூபியான என்னிடத்தில் அவைகளுக்கு (வாயுவுக்கும் அக்னிக்கும்) பீடிப்பதற்குக் காரணமாயிருக்கும் தன்மை எப்படியிருக்கும்?

**சரீர - ஸ்தி2தி - சைதி2ல்யம் ச்வேத - லோம ஸமந்விதம் |**
**ஜரா ப4வதி ஸா நாஸ்தி நிரம்சே மயி ஸர்வகே3 ||** 65

வெளுப்பாய்ப்போன ரோமத்துடன் கூடிய சரீரத்தின் கட்டுக்குத் தளர்ச்சி என்பது ஜரை (மூப்பு) ஆகிறது. அந்த ஜரை, அம்சங்களேயில்லாமல் எங்கும் இருக்கிற என்னிடத்தில் கிடையாது.

**யோஷித் - க்ரீடா3 ஸுக2ஸ்யாந்தர் - க3ர்வாட்4யம் யௌவநம் கில |**
**ஆத்மாநந்தே3 பரே பூர்ணே மயி நாஸ்தி ஹி யௌவநம் ||** 66

பெண்களுடன் கிரீடை செய்வதில் ஸுகமுள்ளவனுக்கு அல்லவா மனத்திற்குள் கர்வம் நிரம்பியதான யௌவனம் என்பது? எல்லாவற்றிற்கும் மேலாகவும் நிறைந்தவனாகவும் தன்னிடத்திலேயே ஆனந்தத்தை உடையவனுமான என்னிடத்தில் யௌவனம் கிடையாது.

**மூட⁴ - பு³த்³தி⁴ பரிவ்யாப்தம் து³:கா²நாமாலயம் ஸதா³ ।**
**பால்யம் கோபன சீலாந்தம் ந மே ஸுக² - ஜலாம்பு³தே⁴: ॥** 67

மூட அறிவினால் வியாபிக்கப்பட்டதாயும், எப்பொழுதும் துக்கங்களுக்கு இருப்பிட மாயும், கோபித்துக்கொள்வதிலேயே முடிவுள்ளதாயும் உள்ள பால்யம், சுகமாகிய ஜலம் நிரம்பிய ஸமுத்திரமாகிய எனக்குக் கிடையாது.

**ஏவம் தத் - த்வ - விசாராப்³தெ⁴ள நிமக்³நாநாம் ஸதா³ ந்ருணாம் ।**
**பரமாத்³வைத - விஜ்ஞாந மபரோக்ஷம் ந ஸம்சய: ॥** 68

இவ்விதமாக எப்பொழுதும் தத்வ விசாரக்கடலில் நன்கு மூழ்கியுள்ள மக்களுக்கு மேலான இரண்டற்ற அனுபவஞானம் பிரத்யக்ஷமாக ஏற்படுகிறது. இதில் சற்றும் ஐயமில்லை.

